



**'ய**ட்சகானம்' என்ற ஒரே மலையாளப் படத்துடன் தன் டைரக்ஷன் திறமையைக் காட்டி விட்டு, அதற்குப் பிறகு தொடாமல் இருக்கிறுர் ஷீலா. வெற்றி அடைந்த படத்திற்குப் பிறகு, மற்ற படங்களின் மூலம் ஏன் தன் டைரக்ஷன் திறமையைக் காட்டக் கூடாது?

"'யட்சகானம்' படத்திற்குப் பிறகு பல தயாரிப்பாளர்கள் தங்கள் ப[illegible]ங்களை டைரக்ட் செய்வதற்காக [illegible] என்னை அணுகி ளர்கள். தூங்க[illegible] கிடைக்காத

'யட்சகானம்' படத்தை டைரக்ட் செய்யும்போது எனக்கு ஒரு பிரச்னை எழுந்தது. படத்தில் 'அறுபத்துநான்கு கலைகள்' பற்றிய பாடல் ஒன்றிற்கு நான் சற்றுக் கவர்ச்சியாக நடனமாட வேண்டும். முதலில் நடிகை என்ற முறையில் தயங்கினேன்; ஆனல், டைரக்டர் என்ற முறையில் அந்த நடனத்தை எப்படியாவது படமெடுத்து விடவேண்டும் என்று நினைத்தேன். டைரக்டராக வெற்றி பெற்றேன். என் மனத்தில் எப்படியெல்லாம் அந்தக் காட்சியை எடுக்கவேண்டும் என்று நினைத்திருந்தேனே, அதற்கு மேலாக சிறப்பாகவே எடுக்க முடிந்தது!''

**''நீங்கள் டைரக்ட் செய்வதானல், அதிகப் பணம் செலவழிகிறது என்று கூறுகிருர்களே?''**

''இது உண்மையல்ல. ஓரளவிற்கு என்னல் முடிந்த வரையில், 'யட்சகானம்' படத்தின் செலவைக் குறைக்க முயற்சி செய்தேன். படம் முழுவதும் வெளிப்புறப் படப்பிடிப்பானதால் சற்று செலவு அதிகமாயிற்று. சில சமயங்களில் பெரிய நடிகர்களுக்காக 'டூப்' போட்டே படத்தை முடித்தேன். ஒரு விஷயம். நான் சற்று 'காஸ்ட்லி' (Costly) ஆக இருக்கவே பிரியப்படுகிறேன்!''

**'''அனுபவம்' மலையாளப் படத்திற்குப் பிறகுதான் மீண்டும் உங்களுக்குஅதிக வாய்ப்புகள் கிடைத்திருக்கின்றன, இல்லையா?''**

''நான் ஒரு குழந்தைக்குத் தாயான பின் அதிகப் படங்களில் நடிக்க மறுத்துவிட்டேன். குழந்தைக்குத் தாயின் அன்பு முதல் மூன்று வருஷங்களுக்கு மிகவும் முக்கியம். அதனல் அதிகப் படங்களில் நடிக்க ஒப்புக்கொள்ளவில்லை. இப்போது என் மகன் பள்ளிக்குச் செல்கிறுன். இப்பொழுது குழந்தையைப் பற்றிய பிரச்னை இல்லை. வாய்ப்புகள் வந்தன—ஏற்றுக் கொண்டேன்.

நடிக, நடிகையர் எந்தக் காரணத்தைக் கொண்டும் நடிக்காமல் இருந்துவிடக் கூடாது. எந்த வயதாக ஆனலும், தன் ஆற்றலை அந்தந்த வேடமேற்று ரசிகர்களுக்குக் காட்ட வேண்டும்.

ஆறலைக்கள்வர் இரும்பினால் செய்யப்பட்ட தம்முடைய அம்பை நக நுனியிலே புரட்டுதலால் எழும் ஓசையைப் போல இருக்கிறதாம் அந்த ஆண் பல்லி எழுப்பும் ஓசை. அம்பின் நுனியைக் கூர்மைப்படுத்துவதற்காகத் தீட்டும்பொழுது ஒருபுறம் மற்றொரு புறத்தைவிட அதிகமாகத் தேய்ந்துவிடக் கூடும். அப்படித் தேய்ந்திருக்கிறதா அல்லது சமமாகத் தேய்ந்திருக்கிறதா என்பதைத் தெரிந்துகொள்ள அந்த அம்பின் தேய்க்கப்பட்ட இரும்பினாலான நுனியை நகத்தினாலே புரட்டிப் பார்க்கிறார் கள்வர். அப்படிப் புரட்டிப் பார்க்கும்போது எழும் ஓசையைப் போல இருக்கிறதாம் இந்த ஆண் பல்லி பெண் பல்லியை அழைக்க எழுப்பும் ஓசை. இந்த உவமையைக் கையாளும் கவிஞன் இரண்டு ஓசைகளையும் மிக நுணுக்கமாகச் செவிமடுத்து அவை இரண்டுக்குமிடையே சொல்லுக்குப் பலனுண்டு என்று நம்புபவர்கள் நம் நாட்டில் இருக்கிறார்கள். அத்தகைய நம்பிக்கையின் அடிப்படையில் பல்லி எழுப்பும் ஓசைக்குப் பலன் சொல்வதைக் கவிஞன் தன்னுடைய கற்பனையைக் கொண்டு இவ்வாறு கூறுகிறான் என்று கருதுதலும் பொருந்தும். இக் கருத்து ஓர் அகநானூற்றுப் பாடலினால் வலிவு பெறும். வழிப்போக்கருக்கு மேல் வரும் நிகழ்ச்சிகளை அறிவிக்கின்ற சிறிய செம்மையுடைய நாவினையும் மணியோசை ஒலித்தாற் போன்ற தெளிந்த குரலையும் சோதிடம் கூறுகின்ற வாயையும் உடைய பல்லியைக் 'கொண்ட காட்டினை அவ்வகநானூற்றுச் செய்யுள்—

**'உறுவது கூறும் சிறு செந்நாவின்**
**மணி ஓர்த்தன்ன தெள் குரல்**
**கணிவாய்ப் பல்லிய காடு'**

**(அகம் 151: 13-15)**

என்று வருணிக்கிறது.

# 'விரைவில் வருவான் தலைவன்!'

உள்ள ஒற்றுமையை உணர்ந்திருக்கிறான் என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது.

**'உள்ளர் கொல்லோ தோழி கள்வர் தம்**
**பொன் புனை பகழி செப்பம் கொண்மார்**
**உகிர் நுதி புரட்டும் ஓசை போல,**
**செங்கால் பல்லி தன் துணை பயிரும்**
**அங்கால் கள்ளி அங்காடு இறந்தோரே'**

**(குறுந்தொகை—16)**

என்பது அந்தப் பாட்டு. 'உள்ளார் கொல்லோ' என்பதற்கு 'நம்மை நினையாரோ' என்று பொருள். 'பொன் புனை பகழி' என்பதில் அமைந்துள்ள 'பொன்' என்ற சொல் இரும்பைக் குறிக்கும். 'மூங்கிற்கோலின்' ஒரு தலையில் இரும்பால் இலைபோல் ஆன வடிவுகளில் செய்யப்பட்ட உறுப்புக்களை செருகியதே அம்பு. 'பொன் புனை பகழி' என்ற சொற்றொடர், இதனைத்தான் குறிக்கிறது. 'செப்பம் கொண்மார்' என்ற சொற்றொடரில் வந்துள்ள 'செப்பம்' என்ற சொல் கூர்மையைக் குறிக்கும். 'உகிர்' என்ற சொல்லுக்கு நகம் என்றுபொருள். 'கள்ளியங்காடு' என்பது கள்ளிகள் நிறைந்த பாலையைக் குறிக்கிறது.

இந்தப் பாட்டின் நயத்தை வேறு விதமாகக்கூட நுகரலாம். பல்லி பல்லியின் காதலைப் பயன்படுத்தியது போல யானையின் காதலையும் கவிஞர்கள் இவ்வாறே பயன்படுத்தி இருக்கிறார்கள். தலைவனின் பிரிவை ஆற்றாது பெரிதும் வருந்தும் தலைவியை நோக்கி, அவர் அன்பு மிக்குடையராத லின் விரைவில் வந்து விடுவார் என்று தோழி ஆறுதல் கூறுகிறாள். ''தலைவியே! தலைவர் நின்பால் மிக்க அன்புடையர். அவர் சென்ற பாலை நிலத்தில் ஆண் யானை தன் பிடியினுடைய பசியைப் போக்கும் பொருட்டு யா மரத்தின் பட்டையை உரித்து அதன் நீரை ஊட்டும்; அதனைக் கண்டு உன்னைப் பாதுகாக்கும் தன் கடமையை எண்ணி அவர் விரைவில் மீள்வார்'' என்று தலைவி ஆறுதல் கூறுவதை—

**'நசை பெரிதுடையர் நல்கலும் நல்குவர்**
**பிடி பசி களைஇய பெருங்கை வேழம்**
**மென் சினை யாஅம் பொளிக்கும்**
**அன்பின தோழி அவர் சென்ற ஆறே'**

**(குறுந்தொகை - 37)**

என்ற பாடல் காட்டும். 'நசை பெரிதுடையர்' என்பதற்கு, 'தலைவர் உன்பால் விருப்பம் மிக உடையவர்' என்பது பொருள். 'களிறு' என்ற சொல் ஆண்

நீதிபதி மு.மு. இஸ்மாயில்

அவளும் சரித்திர டிபார்ட்மென்டில இருந்ததால அவனுடன் நெருக்கமாகப் பழகப் போதுமான காரணங்களைக் கற்பனை செய்ய முடிந்தது. முதலில் அவன் சற்று விலகித்தான் இருந்தான். தயக்கத்துடன் பேசினான். அவளது அப்பட்டமான ஹீரோ ஒர்ஷிப் அவனுக்குப் போதையூட்டிருக்க வேண்டும். இப்போது அவளோடு மனம் விட்டுச் சிரித்துப் பேசுகிறான். வாக்கிங் வருகிறான்..அவனது வார்த்தைகளிலும் செயல்களிலும் எத்தகைய கனிவு?

அவள் ஹாஸ்டலை நெருங்கும்போது அவளுககுத் திடீரென்று தோன்றிற்று. இந்த விஷயம் சுதாவுக்குத் தெரிந்தால் அவள் என்ன சொல்வாள்? லீனாவுக்குச் சற்று யோசனையாக இருந்தது. ஆனால் கூடவே ஓர் அலட்சியமும் தோன்றிற்று. சுதா என்ன நினைத்தால் அவளுக்கென்ன? கிட்டத்தட்ட ஆறு மாதங்களாக இருவரும் ஒரே அறையில் வசிக்கிறார்கள். இருந்தும சுதாவைப்பற்றி அவளால் ஒன்றுமே நிச்சயமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. சுதா மனம்விட்டு என்றுமே தப்பித்தவறிப்பேசிக்கூடக்கேட்டதில்லை. மற்ற ஆண்களுடன், மனிதப் பிறவிகள் என்கிற ரீதியில் சகஜமாகப் பழகுகிறாளே தவிர, பருவ உணர்ச்சிகள் ஏதும் இருப்பதாகக்கூடத் தெரியவில்லை. -அவ்வளவு அழகாக அவள் இருந்தும் எந்த ஆணும் அவளிடம் இளித்து வாலாட்டினான் என்கிறசந்தர்ப்பமேஏற்பட்டதில்லை.அது எப்படிச் சாத்தியமாயிற்று என்று லீனாவுக்கு அதிசயமாக இருந்தது என்னவோ இருந்தது சுதாவிடம். 'ஏதோ ஒரு வகையான கம்பீரம்—வெறியைத் தூண்டாத மரியாதை கொடுக்கத் தூண்டும் ஒரு கம்பீரம்! லீனாவின் அடிமனத்தில் சுதாவுக்குத் தன்னைவிட விவேகம் உண்டு என்று ஓர் எண்ணம் குறுகுறுத்ததால் அவள் தனது புதிய சிநேகிதத்தைப் பற்றி என்ன நினைப்பாளோ என்று ஒரு யோசனை குடைந்தது.

ஆனால் அவளுக்கு எங்கே தன்னுடைய உணர்ச்சிகள் புரியப் போகிறது? காதலைப் பற்றியும் அதனால் நெஞ்சில் ஏற்படும் அலைகளைப் பற்றியும் அந்த முசுடு எங்கே புரிந்துகொள்ளப் போகிறாள்? கௌதம்மை தூரத்தில் பார்க்கும் போதே நெஞ்சு படபடக்கிறதே? நாத்துக்கிழவி மாதிரி எப்பவும் வேதாந்தம் பேசுகிறவளுக்கு இத்தகைய மெல்லிய உணர்வுகள் எப்படிப் புரியப் போகிறது?

ஹாஸ்டலை அடைந்ததும் அறைக கதவு தாழிடப்படாமல் இருப்பதையும், உள்ளே விளக்கும் எரியாமலிருப்பதையும் பார்த்து வியந்து உள்ளே நுழைந்து விளக்கைப் போட்டாள். சுதா கண்ணைக் கூசும் வெளிச்சத்தைப் பாரக்க முடியாமல் கண்ணை மூடிக் கொண்டாள்.

அவளை அந்த மாதிரி பார்க்கும்போது லீனாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஏய், என்ன உடம்புக்கு?'' என்று கேட்டபடி அருகில் வந்தாள்.

தன் முகத்தைக் காண்பித்துக் கொள்ளவே சுதாவுக்கு வெட்கமாக இருந்தது.

''ஒன்றுமில்லை லீனா, கொஞ்சம் தலைவலி.''

''இந்தக் குளிர் ஊரில் நீ நடு ராத்திரியில் எழுந்து குளிக்கறதினால் வரதுதான் இது'' என்று அவள் உரிமையோடு கோபித்துக் கொள்ளும்போது,சுதாவுக்கு சிரிப்புக்கூட வந்தது. **(தொடரும்)**

யானையையும் 'பிடி' என்ற சொல் பெண் யானையையும் குறிக்கும். 'பெருங்கை வேழம்' என்பது பெரிய துதிக்கையை யுடைய ஆண் யானை என்று பொருள் படும். அத்தகைய ஆண் யானை தன் பிடியின் பசியை நீக்குவதற்காக மெல்லிய கிளைகளையுடைய யா மரத்தின் பட்டையை உரித்து அதன் நீரை அப் பிடி பருகச் செய்யும். இது 'அன்பின'- அன்பைப் புலப்படுத்துவதற்கு இடமாக அமைந்திருக்கிறது. இந்த நிகழ்ச்சி, ''அவர் சென்றவாறே'' - தலைவர் செல்லும் வழிகளில் காணும் காட்சிகள். அத்தகைய அன்பு நிறைந்த காட்சிகளைக் கண்ணுறும் தலைவனும் தன் தலைவிமேல் நசைபெரிதுடைமையால் விரைவில்

கொடுக்கும் நிகழ்ச்சிக்கு வேறொரு நிகழ்ச்சியைக் கவிஞர் உவமையாகக் கூறு கிறார். வடதிசையிலே இருப்பது வளவிய நீர்ப் பெருக்கினையுடைய யமுனையாறு. அந்த ஆற்றின் துறைகள் நெடிய மணற் பரப்பினையுடைய அகன்ற துறைகள். தன் ஆடைகளைக் களைந்து வைத்துவிட்டு ஆயர் பெண்கள் அத்தகைய துறைகளில் இறங்கி நீராடுகிறார்கள். அவர்களுடைய ஆடைகளைக் கவர்ந்து ஒளித்து வைத்து விடுகிறான் கண்ணன். அந்த வேளையில் கண்ணனின் அண்ணன் அங்கே வருகிறான். அப்பொழுது அந்தப் பெண்கள் தான் ஏறி நின்ற குருந்த மரத்தின் தழைகளால தங்களை மூடிக் கொள்வதற்காக கண்ணன அந்த மரத்தின் கொம்புகளைத் தாழ்த்தி வளைத்துக் கொடுக்கிறான். அது போல இருக்கிறது. யா மரத்தை வளைத்துஅதன தழைகளைத் தன் மடப்பிடி உண்ணக் கொடுக்கும் மற வேழத்தின் செயல். இந்த அழகிய கருத்தினையும் உவமையையும்




'............ வடா அது
வண்புனல் தொழுநை
வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்
தழை உடிஇயர்
மரஞ் செல மிதித்த
மாஅல் போலப்
புன் தலை மடப்பிடி
உனிஇயர் அங்குழை
நெடுநிலை யா அம் ஒற்றி
நனை கவுள்
படி ஞிமிறு கடியும் களிறே
தோழி
..................
பிரிந்து சேண் உறைநர்
சென்ற ஆறே'
(அகம்—59)

என்ற பாடல் நயம்பட உரைக்கின்றது. (தொழுநை - யமுனை. அண்டர் மகளிர்- இடைச்சியர். மா அல் - திருமால்; கண்ணன். நனைகவுள் - மத நீரால் நனைகின்ற கன்னம், ஞிமிறு - தேனீ)

...ரும்பி வருவான் என்று தோழி கூறுவ ...தைக் குறிப்பாக உணர்கிறோம். இதே ...ருத்தினை அகநானூற்றுச் செய்யுள்ஒன்று வேறு விதமாக எடுத்துக் காட்டும்.

தன் இளம் பிடி உண்ணும் பொருட்டு ...ழிய தழையையுடைய நிமிர்ந்து ...ற்கின்ற யா மரத்தினை ஆண் யானை ...தன காலால் மிதித்து வளைத்துக் கொடுக் ...கும். அதன் தழையாலேயே, மத ...ரால் நனைந்த தன் கன்னங்களில் ...ாய்க்கின்ற வண்டுகளையும் ஓட்டு ...கும். அத்தகைய காதற் காட்சியைக் ...காண்கின்ற தலைவர் விரைவிலே மீண்டு வருவர் என்று தோழி தலைவிக்கு ஆறுதல் கூறுகிறாள். இப்படி ஆண் யானை தன் காலால் யா மரத்தை மிதித்து வளைத்துக்

இத்தகைய உணர்ச்சியை வலியுறுத் தும் பாடலொன்று கலித்தொகையில் இடம் பெற்றிருக்கிறது. தலைவன் பொருள் தேடுவதற்காகத் தலைவியை விட்டுச் சென்று விடுகிறான். அவன் பிரி வுக்காகத் தலைவி வருந்துகிறாள். வழக்கம் போல் தோழி, 'தலைவன் வருவான்' என்று கூறித் தலைவியைத் தேற்றுகிறாள். தான் அப்படிச் சொல்வதற்கான காரணங்களையும் எடுத்துக் காட்டுகிறாள்.

தலைவியோடு கூடி சொன்னலம் கடந்த காமப் பேரின்பத்தில் திளைத்த தலைவன், தான் பெற்ற இன்பத்தின் இயல்பைக் கூறி மகிழ்கிறான். உண்மையில் அவனும் அவளும் ஒருவரேயாவர். என்றாலும் பிரிந்துப் பார்த்தாலொழிய இன்பத்தை நுகர முடியாது. ஆண்டவனுக்கும் உயிருக்குமிடையே உள்ள தொடர்பும் இத்தகைத்தே. இவற்றைச் சேர்த்து,

'சொற்பால் அமுதுஇவள் யான்சுவை
என்னத்துணிந்து இங்ஙனே
நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று
நான் இவளாம் பகுதி
பொற்பு ஆர்அறிவார். புலியூர்ப் புனிதன்
பொதியில் வெற்பில்
கற்பாவிய வரைவாய்க் கடிதோட்ட
களவகத்தே'

என்று மாணிக்கவாசகர் பாடுவார். இதன்படி தலைவன், "பொருள் ஒன்றாயிருந்தும் சொல்லளவிலே அமுது என்றும் ருசிக்க முடியாது. ஆகையால் அமுதை ஒருவர் உண்டால்தான் அதனுடைய சுவையை ருசிக்க முடியும். எனவே, அமுது—அதன் சுவை என்று பிரிக்கப் படுவது அந்தச் சுவையை நுகரும் பொருட்டே. இந்த அடிப்படையில்தான் 'அமுது இவள்; யான் சுவை' என்று இப்பாட்டு கூறுகிறது. அப்படியானால், 'அமுதும் சுவையும் ஒன்றாய் இருப்பது போல நானும் அவளும் ஒருவரே ஆவோம்' என்பதை, 'நான் இவளாம் பகுதி' என்று தலைவன் கூறுவதாக இப்பாட்டில் காணப்படும் சொற்றொடர் விளக்கி நிற்கிறது. 'பகுதி' என்ற சொல்லுக்கு இங்கே, 'தன்மை' என்று பொருள்.

எனவேதான், சமுதாய வளர்ச்சிக்காக இந்த ஒன்றிய நிலை என்றுமே தொடர்ந்திருக்கும் நிலையாக இல்லாமல், அவ்வப்போது மறையும் நிலையாக அமைந்து விடுகிறது. அப்படித் தோன்றி மறையும் நிலையாக இருப்பதன் காரணமாகத்

# அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்...

அதன் சுவை என்றும் இரண்டாகப் பகுக்கப்படுதல் போன்று உண்மையில் நானும் இவளும் ஒருயிரேயாவோம். ஆயினும் அந்த ஒருயிரையே ஆண் என்றும் பெண் என்றும் இரு கூறுபடுத்தி இறைவன் இருவராகப் படைத்திருக்கிறான்.

அவ்வாறு படைத்தமைக்குக் காரணம் நாங்கள் மீண்டும் அன்பால் ஒன்றுபட்டு எல்லையில்லாத பேரின்பம் நுகர்ந்து வாழ்க என்னும் அவனுடைய திருவுள்ளக் குறிப்பே ஆகும். இவ்வாறாக எய்தும் அழகிய இன்பச் சிறப்பினை நானே அறிவதல்லது பிறர் யார் அறிவர்?'' என்று சொற்களால் விளக்க முடியாத ஒன்றை ஒருவகையாகச் சொல்ல முயன்று மகிழ்ச்சியடைகிறான். அமுதிலிருந்து அதன் சுவையைப் பிரிக்க முடியாது. ஆனால் அமுதினாலேயே தன் சுவையை

தான் அந்நிலையிலிருந்து விடுபட்டவுடன் மறுபடியும் ஆண்—பெண் என்ற வேறுபாட்டையும் அவ்வேறுபாட்டின் காரணமாக உண்டாகும் உணர்ச்சிகளையும் அந்த உணர்ச்சிப் பிடிப்பின் காரணமாக விளையும் பிணைப்புகளையும் அதிலிருந்து தோன்றும் படைப்புக்களையும் சமுதாய வளர்ச்சியின் நன்மைக்காக நாம் காண்கிறோம்; அனுபவிக்கிறோம்; பிறர் அனுபவிப்பதைப் பார்க்கிறோம்; அவர்கள் அனுபவித்துச் சொல்வதைக் கேட்கிறோம். இந்த நிலையில்தான் கூடும் போது தோன்றும் மகிழ்ச்சியையும் பிரியும்போது உண்டாகும் துன்பத்தையும் அதனால் பாதிக்கப்பட்டவர்கள் அனுபவிக்குமிடத்து அவற்றுக்கு அழியா வடிவைக் கொடுப்பதை இலக்கியம் தன் சிறந்த பணியாகக் கொண்டு விடுகிறது.

கம்பன் இராமனையும் சீதையையும் வைத்துக் கொண்டு இவ்வுணர்ச்சிகளை

நீதிபதி மு. மு. இஸ்மாயில்

''என் கட்டை விரலுக்கு மறுபடியும் ஆபத்து வந்துவிடுமோன்னு பயமாகப் போய்விட்டது'' என்று சிரித்தாள் அவள்.

அவன் சிரித்துக் கொண்டே அவளுடைய கைகளை எடுத்துத் தன் கைகளில் வைத்து அழுத்தினன்: ''சுதா, யூ ஆர் எ டார்லிங் எ டார்லிங்...''—அவனது மனத்தின் தாபமெல்லாம் அந்த அழுந்தலில் இருந்த மாதிரி இருந்தது.

சுதாவுக்கு வியர்த்தது: ''நீங்கள் இந்த மாதிரி செய்வதாயிருந்தால் நான் உங்களுடன் வரவே மாட்டேன்...''

அவன் அவளுடைய கையை விடாமலேயே சொன்னன்: ''பின்னே என் உணர்ச்சிகளை நான் எந்தவிதத்தில் உனக்குக் காட்டுவேன்?''

''வெறும் உங்கள் பார்வையிலேயே புரிந்து கொள்வேன்...''

''ஆமாம், உனக்குத் தண்ணீரை சும்மா பார்த்துக் கொண்டிருந்தாலே தாகம் தீர்ந்து விடும்...ஓ! உன்னுேடு எவ்வளவு பேசணும் என்று துடித்துக் கொண்டிருக்கிறேன். நீயானல் வீணவின் பேரிலும், போனின் பேரிலும்தான் அதிக அக்கறை காட்டுகிற மாதிரி இருக்கிறது.. நடராஜனின் பேச்சைக்கூட நீ இனிமேல் கேட்க ஆரம்பித்துவிடுவாயோ என்று பயமாக இருக்கிறது...''

சுதா பெரிதாகச் சிரித்தாள்: ''அவரைப் பார்த்தால் கொஞ்சம் ஹுாஸ் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்ருள் அவள்.

''இந்த மாதிரி இருப்பவர்களிடம் தான் நாம் ஜாக்கிரதையாக இருக்கணும். சாமர்த்தியமாகப் பேசுகிருேம் என்று எதையாவது உளறி வைப்பார்கள். ஐதிங்க் யு மஸ்ட் இக்னுேர் தட் ஃபெல்லோ..'' என்று பிரபாகர் சற்று சீரியஸாகப் பேசுவதைக் கேட்டு அவள் யோசனையுடன் நடந்தாள்.

அவர்கள் முக்கு திரும்பினதும் வாட்லேக் அற்புத அழகோடு காட்சியளித்தது. ஒரு குழந்தைத்தனமான மகிழ்ச்சியோடு சுதா, ''ஓ.. எத்தனை அழகாயிருக்கிறது பாருங்கள்!'' என்ருள்.

அவளது மகிழ்ச்சி அவனுக்குப் பரவசமாக இருந்தது. அவளது கையை மறுபடி பற்றி, ''அடிக்கடி இங்கே வரலாமா?'' என்ருன்.

அவள் பதில் பேசாமல் புன்னகைத்தபடி இயற்கை எழிலை ரஸித்தபடி, தன் கை அவனதில் கோத்திருப்பதுகூட உணர்வில்லாதவள் மாதிரி நடந்தாள்.

அவன் ஓர் ஒதுக்குப்புறமான பகுதிக்கு அவளை அழைத்துச் சென்று அமரச் செய்தான்.

இருவரும் அப்படித் தனிமையில் உட்கார்ந்ததுமே சுதா சட்டென்று ஏதோ ஒரு கனம் மனத்தை அழுத்துகிற மாதிரி உணர்ந்தாள். அவன் ஏதோ தீவிரமாக யோசனை செய்பவன் போல் சற்று நேரம் இருந்தான். பிறகு திடீரென்று விழித்துக் கொண்டவன் போல் கேட்டான்:

''ஊம்... இப்பொழுது சொல்லு, எதற்காக அப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்தாய்?''

இருள் சரசரவென்று விரிய ஆரம்பித்திருந்தது. தன் மனத்திலும் இருள் சூழ்வதைப் போல் இருந்தது சுதாவுக்கு. அவள் தலையைக் குனிந்து கொண்டாள். எப்படிச் சொல்வது என்று புரியவில்லை. சொன்னல் புரிந்து கொள்வாஞ என்றிருந்தது. புரிந்து கொண்டால் தன்னைப் பற்றி என்ன நினைப்பான் என்று பயமாயிருந்தது.

அவனைப் பார்க்காமலே எங்கேயோ பார்த்தபடி அவள் சொன்னுள்: ''எவ்வளவோ நாட்களுக்கு முன்னல் இந்த யூனிவர்ஸிடி செய்திருந்த அட்வர்டைஸ்மெண்ட்டுக்கு அப்ளிகேஷன் போட்டிருந்தேன். இன்ட்டர்வியூவுக்கு கால் வந்ததும் உடனே கிளம்பத்தான் நேரமிருந்தது....''

தான் பேசுவது நிஜமாக இருந்தாலும் அவனுக்கு அது எவ்வளவு அபத்தமாகப் படும் என்று அவளுக்குப் புரிந்தது.

(தொடரும்)



தூத்துக்குடியில் ஓர் ஓட்டலில் எழுதி வைக்கப்பட்டுள்ள குறள்:

''நிறைகாணின் பிறர்காணச் செய்வீர் குறைகாணின் நிறைகாண மொழிவீர் முனைந்து.''

—ராஜேந்திரன்



எப்படிச் சித்திரிக்கிறுன் என்பதைத்தான் நாம் இப்போது பார்க்கிறேம். கன்னி மாடத்தில் நின்ற சீதையை இராமன் கண்டான் என்றும் இராமனை சீதை கண்டாள் என்றும் நாம் கண்டோம், அதனைக் கம்பன்—

'எண்ண அரு நலத்தினுள் இளையள் நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைபெருது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினுன்; அவளும் நோக்கினுள்.'

(பால காண்டம் - மிதிலைக் காட்சிப் படலம்-35)

இப்பாட்டில், 'கவ்வி', 'உண்ணவும்' என்னும் இரு சொற்களும் மிக அற்புத மான படைப்புக்கள். ஒன்றையொன்று ஆவலுடனும் ஆர்வத்துடனும் வேகத் துடனும் பற்றுவதற்கு 'கவ்வுதல்' என்பதைவிட அழுத்தமான சொல்லைப் பயில முடியாது. அது போன்றதே 'உண்ணவும்' என்ற சொல்லும். உண்ணுதல் காரணமாக உண்ணப் படுவது தன்னுடைய தனி அமைப்பை இழந்து விடுகிறது. இங்கோ இராமனின் கண்கள் சீதையின் கண்களைக் கவ்வி உண்டுவிடுகின்றன; அவ்வாறே சீதை யின் கண்களும் இராமனின் கண்களைக் கவ்வி உண்டுவிடுகின்றன. அப்படிப் பார்க்கும்போது இருவர் கண்களும் தத்தம் தனி அமைப்பை இழந்து மற்றவர் கண்களோடு இயைந்து விடுகின்றன. இப்படிக் கண்கள் இயைந்து ஒன்றும்போதே இருவர் உணர்வுகளும் ஒன்றிவிடுகின்றன.

இப்பாடலில் கம்பனின் இன்னெரு சிறப்பையும் காணலாம். 'அண்ணலும் நோக்கினுன்; அவளும் நோக்கினுள்' என்றுதான் சொல்கிறுன். இருவரும் ஒருவரை யொருவர் நோக்கினர் என்று சொல்ல வந்தவிடத்தும் அண்ணல் என்று இராமனை முதலில் குறிப்பிடுகிருனேயன்றி சீதையை முதலில் குறிப்பிடவில்லை. சீதை இராமனை நோக்கினுள் என்று சொல்லி விட்டுப் பிறகு, இராமன் சீதையை நோக்கினுன் என்று சொல்லியிருந்தால் சீதைதான் முதலில் இராமனை நோக்கினுள் என்று ஆகிவிடும். அது பெண்டிருக்கு இயல்பாய் அமைகிற நாணத்திற்குக் களங்கம் ஏற்படுத்துவது ஆகும். ஆகவேதான் இராமன் சீதையை நோக்கியதைக் கவிஞன் முதலில் சொல் கிறுன்.

இதிலிருக்கும் இன்னெரு சிறப்பு என்னவென்றுல் 'நோக்குதல்' என்ற சொல்லின் ஆட்சி. 'நோக்குதல்' என்ற சொல்லுக்கே, கண்ணொடு கருத்தும் தொடரப் பார்த்தல் என்பது பொருள். இங்கே ஒருவர் கண்களை மற்றவர் கண்கள் கவ்வவும் உண்ணவும் உணர்வு ஒன்றவும் ஒருவரையொருவர் கண்டனர். ஆதலின் 'நோக்குதல்' என்ற சொல் லினைக் கவிஞன் ஆள்கிறுன். காணல், பார்த்தல் என்ற சொற்களைக் கவிஞன் கையாண்டிருந்தால் இருவருக்குமிடையே நிகழ்ந்த இந்த உணர்வின் ஒன்றிப்பை அச்சொற்களால் உணர்த்த முடியாது.

இந்த நோக்கு என்ன செய்தது என் பதைக் கவிஞன் மேலும் சொல்கிறுன். கவிகளின் கருத்துப்படி ஆடவர் உடலில் மிகக் கவர்ச்சியான பகுதி தோள்களும் பெண்டிர் உடலில் தனங்களும் ஆம்; அவையே வேட்கையை விளைப்பதில் சிறந்த உறுப்பெனக் கொள்ளப்படுவன. ஆக இந்தக் கருத்துக்கேற்ப யார் யாருடைய நோக்கு எது எதன் மேல் பதிந்தது என்பதைக் கம்பன் குறிப் பிடுவான். சீதையுடைய நோக்கு இராம னுடைய தோள்களிலும் இராமனுடைய நோக்கு சீதையின் தனங்களிலும் பதிகின்றன. ஒவ்வொருவருக்கும் கண்கள் இரண்டு. ஆண்களுக்கு இரு தோள்கள். பெண்களுக்குத் தனங்கள் இரண்டு. ஆக இருவருடைய கண்ணிணைக்கும் இரண்டு இலக்குகள் கிடைத்து விடுகின் றன. இந்த இலக்குகளில் அவ்விருவர் நோக்குகளும் பதிந்த விதத்தையும் அவரவர் தன்மைக்கு ஏற்ப கவிஞன் எடுத்துக்காட்டுவதில் நயமும் சிறப்பும் இருக்கின்றன.




“ஆபீசில் என்ன சொன்னார்கள்?'' என்று ஜகன்னாதனைக் கேட்டாள் அம்மா. அம்மாவின் குரலில் ஒரு கரகரப்பு வேறு!

ஜகன்னாதனுக்கு, அனுகூலமில்லாத அந்தப் பதிலைச் சொல்லவே சற்றுக் கஷ்டமாயிருந்தது. அப்பா எங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறார் என்று எட்டிப் பார்த்தான். அவர் காதுக்கு முக்கியமாக இந்த பதில் எட்டவேண்டும் என்று பிரயாசை எடுத்துக் கொண்ட மாதிரி, குரலைச் சற்று உயர்த்தி, ''டிரான்ஸ்ஃபர் உத்தரவை இனி மாற்றிப் போட முடியாதாம். ஹெட் ஆபீஸ் தீர்மானம் செய்து, நான்தான் போக வேண்டும் என்று ஒரே முடிவாகச் சொல்லிவிட்ட விஷயம். உன் திருப்திக்கு வேண்டுமானால் நீயே டில்லி போய் எம். டி-யைப் பார்த்துக் கெஞ்சிக் கூத்தாடிப் பார் என்று சொல்லி விட்டார்'' என்றான்.

அம்மா கேட்ட கேள்வி அரைகுறையாகவாவது கேட்டிருக்கும் என்றால், ஜகன்னாதனின் பதில் நிச்சயம் முழுசாக கேட்டிருக்கும் அப்பாவுக்கு. சமையலறையை ஒட்டினாற்போலுள்ள சிறிய டைனிங் ஹாலில், டேபிளில் ஓர் ஓரமாக டிபன் தட்டை வைத்துக் கொண்டு, இட்டிலியை விண்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தார் அப்பா.

மைதிலி இட்டிலியை அவர் தட்டில் வைத்து விட்டு, ''சட்டினியா, இல்லை மிளகாய்ப் பொடியா?'' என்று அவரிடம் கேட்டது ஜகன்னாதன் காதில் விழுந்தது.

''புதுசா பழசா?''

''நேற்றுத்தான் இடித்தது!''

''கொண்டு வா.''

மனைவி, தன் தகப்பனாருக்குப் பரிந்து பரிந்து பரிமாறுவதையும், அவரும் கேட்டுக் கேட்டு ருசித்துச் சாப்பிடுவதையும் ஹாலிலிருந்தே பார்த்தான் ஜகன்னாதன்.

அடுத்த வாரம் பெட்டி படுக்கையுடன் இந்த வீட்டை விட்டு, மைதிலியையும் கூட்டிக்கொண்டு போன பிறகு—

ஜகன்னாதனுக்கு வேலையான கையோடேயே அப்பாவையும் அம்மாவையும் தன்னோடு அழைத்துக் கொண்டு விட்டான். கிராமத்தில் வீட்டை விற்று விட்டு வந்துவிடச் சொன்ன போது அப்பாவுக்குக் கோபமே வந்து விட்டது.

''நீ இல்லாமல் வேணுமானால் நான் இருந்து விடுவேன்டா! வீட்டை விற்று விட்டு இருக்க மாட்டேன்!'' என்றார்.

''பூட்டி வைத்தால் பூரானும் பூச்சியுமாக வீடு பாழாய்ப் போய்விடும். அதற்குத்தான் சொன்னேன். என்ன அம்மா?''

''அவன் சொல்கிறது நியாயம் தானே?''

''ஆமா, பெரிய நியாயம்!''

அப்புறம் அப்பா அந்த வீட்டை விற்றார். பணத்தை ஜகன்னாதன் கையிலேயே கொடுத்தார். சென்னைக்கு வந்த இரண்டு வருடங்களில் மைதிலியைப் பெண் பார்த்து அவனுக்குத் திருமணம் செய்து வைத்த பிறகு, அவராகவே நுங்கம்பாக்கத்தில் ஒரு சிறிய வீட்டைப் பார்த்து, விலை பேசி ரிஜிஸ்தரும் செய்தார்.

அப்பாவுக்கு உடம்பு துளி அலுங்கக் கூடாது. டிபனை, சுடச் சுட. ரசமா, சுடச் சுட. அப்பளத்தைக் காய்ச்சினால் தான் பிடிக்கும். சுட்டால் விட்டெறிவார். படுக்கையில் குறைந்தது நாலு தலையணையாவது வேண்டும். அவ்வளவு சொகுசு...

இத்தனை சௌகரியங்களின் பின்னணியில், இப்போது தானும் மைதிலியும் நாகாலாந்துக்கு மாற்றலாகிப் போகிற போது அவருக்கு உண்டாகப் போகிற

# 'இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்'

சீதையின் கண்களைக் கூர்மையுடைய இரண்டு வேலாயுதங்கள் என்று கவிஞன் கூறுவான். அத்தகைய வேலாயுதங்கள் வலிமையுடைய இராமனுடைய தோள்களில் ஆழ்கின்றன. இராமனுடைய கண்களுக்கு இவ்வாறு உவமை எதுவும் கூறாமல் வெறுமனே 'செங்கண்' என்று மாத்திரம் கூறுவான். அந்த செங்கணும் சீதையின் தனத்திலே தைக்கின்றன.

'நோக்கிய நோக்குஎனும்
நுதிகொள் வேல்இணை
ஆக்கிய மதுகையான்
தோளில் ஆழ்ந்தன;
வீக்கிய கனைகழல் வீரன்
செங்கணும்
தாக்கு அணங்கு அனையவள்
தனத்தில் தைத்தவே.'

(பால காண்டம் - மிதிலைக் காட்சிப் படலம்—36.)

[தாக்கு அணங்கு என்பதற்கு மோகினி தெய்வம் என்றும், பொதுவாக திரு—அதாவது இலக்குமி என்றும் பொருள் கூறுவர்.]

சீதையினுடைய கண்களுக்கு வேலினை உவமையாகச் சொல்லி, அவ்வேல், வளர்ந்த வலிமையுடைய இராமனுடைய தோள்களில் ஆழ்ந்தன என்று கவிஞன் கூறுகிறான். வேலை உவமையாக்கும் போதே அந்தக் கண்ணோக்கின் கூர்மையான சக்தி வெளிப்படுத்தப்பட்டு விடுகிறது. இந்த வேலுடைய இலக்கும் இந்த வேலுடைய வலிமையைத் தாங்கிக் கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டுமல்லவா? ஆகையால்தான், இராமனுடைய தோளை 'ஆக்கிய மதுகையான் தோள்' என்று கவிஞன் குறிப்பிடுகிறான். ஆக்கிய மதுகையான் என்றால் வளர்ந்த பெருகிய-வலிமையையுடையவன் என்று பொருள். ஆக, வன்மையான வேலைத் தாங்கிக் கொள்வதற்கு வன்மையான தோள்களையே கவிஞன் காட்டுகிறான். அப்படி இருந்தும் பெண்ணின் பார்வையின் ஒப்பற்ற வலிமையை விளக்குவதற்காக, சீதையின் நோக்கு இராமனின் தோள்களில் 'ஆழ்ந்தன' என்று கூறுவான். 'ஆழ்ந்தன' என்ற சொல்லுக்குப் பதிந்து மூழ்குதல் என்று பொருள். எனவே சீதையினுடைய கூர்மையான நோக்கு இராமனுடைய வலிய தோள்களில் பதிந்து ஆழமாக மூழ்கிவிட்டது.

சீதையுடைய கண்ணுக்கு வேலை உவமையாகக் காட்டியதுபோல இராமனுடைய கண்களுக்கு, கவிஞன் உவமை எதுவும காட்டவில்லை. அப்படிக் காட்டாதது மாத்திரமின்றி இராமனுடைய செங்கண் சீதையின் தனத்தில் தைத்தது என்று மட்டும் கூறி விடுகிறான். 'தைத்தல்' என்ற சொல்லுக்குப் பதிதல், பொருந்துதல், ஊடுருவுதல் என்பன போன்ற பொருள்கள் உண்டு. இங்கே ஊடுருவுதல் என்று பொருள் கொண்டாலும், இராமனுடைய கண்களுக்கு எந்த ஆயுதத்தையும் உவமையாகக் கூறாததன் காரணமாக சீதையின் அங்கம் எதற்கும் பங்கம் உண்டாயிற்று என்ற கருத்தினைக் கவிஞன் கொடுக்கவில்லை. காரணம் என்னவென்றால், பெண் மென்மையானவள்; ஆகவே அதனைத் தாங்கமாட்டாள் என்பதுதான். அது மாத்திரமல்லாமல் இராமனுடைய பார்வை சீதையின் தனங்களில் தைப்பதன் காரணமாக அவளுக்கு உவகைப் பெருக்கும் காமக் கிளர்ச்சியும் உண்டாகுமேயன்றி வேறுவிதமான துன்பம் உண்டாகாது. அதுபோலவே இராமனுடைய தோள்களில் சீதையின் கண்ணாகிய வேல் ஆழ்ந்த போதிலும் அவனுடைய தோள்கள் வலிமை பெற்றனவாக இருப்பதன் காரணமாக அந்த வேல் அவனுக்குத் துன்பத்தை உண்டாக்காமல் ஒத்த இன்பக் கிளர்ச்சியையே உண்டாக்குகிறது. இத்தகைய நயங்கள் அனைத்தையும்

நீதிபதி மு.மு. இஸ்மாயில்

ஒருங்கே தரக்கூடியதாக கம்ப னுடைய இந்தப் பாட்டு அமைந்திருக் கிறது.

இந்த இருவருடைய நோக்கும் செய் யும் வேலையைக் கவிஞன் இவ்வளவோடு விட்டு விடுவதாக இல்லை. காரணம், முதற் சந்திப்பு காதலுக்கு உற்பத்தியாக அமைந்து விடுகிறது; இதிலிருந்துதான் ஈடிணையற்ற பிணைப்பும், பிடிப்பும், பாச மும் பிறக்கப் போகின்றன. ஆகையால் இந்தச் சந்திப்பினுல் தோன்றிய உணர்ச்சி களையும் விளைவுகளையும் அழுத்தமாகவும் ஆழமாகவும் விரிக்கத் தொடங்கி விடு கிருன். ஆகையால் இந்த நோக்குக்கு இன்னொரு வேலையையும் கொடுக்கிருன். ஒருவருடைய கண் மற்றவர் கண்ணைக் கவ்வி விழுங்குகிறது என்று முன்னர் கூறினுன். அப்படி விழுங்கிய கண்ணின் பார்வையைப் பிணிக்கின்ற பாசமாகக்



கவிஞன் இப்போது காட்டுவான். 'பிணித் தல்' என்ற சொல்லுக்குச் சேர்த்துக் கட்டுதல் என்று பொருள். சேர்த்துக் கட்டுதல் என்பதிலிருந்தே இரண்டு பொருள்கள் இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. அப்போதுதான் ஒன் றைப் பிடித்து மற்றொன்ருேடு சேர்த்துக் கட்ட முடியும். 'பாசம்' என்ற சொல் லுக்கு அன்பு என்ற பொருளோடு கயிறு என்ற பொருளும் உண்டு. இங்கே ஒருவரை யொருவர் பருகிய நோக்கு பாசமாகி விடுகிறது. பாசக் கயிற்றை ஒரு பொருளைப் பிடித்து இழுப்பதற்குப் பயன்படுத்துகிருேம். இழுத்துக் கொண்டு வந்த பிறகுதானே மற்ருெரு பொரு ளோடு சேர்த்துக் கட்ட முடியும்? இங்கே இராமனுடைய பார்வையாகிய பாசம், சீதையினுடைய உள்ளத்தைப் பிடித்து ஈர்த்து இராமனுக்குள் கொண்டு வந்து விடுகிறது. அதே சமயத்தில் சீதையி னுடைய பார்வையாகிய பாசக் கயிறு இராமனுடைய உள்ளத்தைப் பிடித்து இழுத்து சீதையினுள் கொண்டு வந்து விடுகிறது. இதன் விளைவு என்ன? ஒருவ ருடைய இதயம் மற்றவருக்குள் மாறி இடம் பெற்று விடுகிறது. இதனைத்தான் கம்பன்,

> 'பருகிய நோக்கு எனும்
> பாசத்தால் பிணித்து,
> ஒருவரை ஒருவர்தம் உள்ளம்
> ஈர்த்தலால்,
> வரிசிலை அண்ணலும் வாட்கண்
> நங்கையும்,
> இருவரும் மாறிப்புக்கு, இதயம்
> எய்தினுர்'

(பால காண்டம் - மிதிலைக் காட்சிப் படலம்—37.)

என்று கூறுவான். இங்கே, இருவருடைய உணர்ச்சிகள் ஒன்றித்த தன்மையை மிக்க அழகாகக் கவிஞன் எடுத்துக் காட்டு கிருன். இந்தப் பாட்டில் இன்னொரு சிறப்பையும் கவிஞன் வைத்திருக்கிருன். முந்தின பாட்டில் சீதையினுடைய கண்க ளுக்கு வேலினை உவமையாகக் கொண்ட கவிஞன், இராமனுடைய கண்களுக்கு எதனையும் உவமையாகச் சொல்லாமல் விட்டனன் என்றும், அப்படி விட்டமைக் குக் காரணம் பெண்ணினுடைய மென் மையையும் ஆணினுடைய வலிமையை யும் பிரித்துக் காட்டுவதற்கே என்றும் கண்டோம். இந்தப் பாட்டிலோ, சீதையை 'வாட்கண் நங்கை'- அதாவது, வாள் போலும் கண்களையுடையவளும் மகளிரில் சிறந்தவளுமான சீதை என்று குறிப்பிடுகிருன். அதே சமயத்தில் இராமனையும் வெறுமனே விட்டுவிட கவிஞன் விரும்பவில்லை. ஆகையால், 'வரிசிலை அண்ணல்' — அதாவது, கட்டமைந்த வில்லையுடைய ஆடவரில் சிறந்தவனுகிய இராமன் என்று குறிப் பிட்டு விடுகிருன். எனவே இராமனுக்கு ஓர் ஆயுதத்தையும் சீதைக்கு ஓர் ஆயு தத்தையும் கொடுத்து இருவரையும் சம நிலையில் வைத்து விடுகிருன். அதாவது இதயம் மாறி விட்டதன் காரணமாக ஒருவர் மற்றவரின் நினைவாகவே ஆகி விடுகின்றனர். இந்த சமநிலையிலும்கூட ஒரு தனி நயத்தைக் காண முடியும்.

எந்த இன்பத்தோடு சேர்தூக்கிப் பார்க்கிருன்? இந்த பரந்த உலகம் தரும் இன்பத்தை முதலில் கருத்திற் கொள்கிருன். அதாவது, விரிந்த அலையையுடைய பெரிய கடலால் சூழப்பட்ட இப்பூவுலக இன்பம். தலைவனும் தலைவியும் இந்தப் பூவுலகத்திலேதான் இருக்கிருர்கள். அவ்விருவரும் இப்பூவுலகத்தின் பாற்பட்டவர்கள்தாம். அவர்கள் பெறும் இன்பமும் இப்பூவுலகம் தரும் இன்பத்தைச் சேர்ந்ததுதான். ஆனுல் இப்போது தலைவன் தன்னையும் தன் தலைவியையும் அப்பூவுலகத்திலிருந்து ஒதுக்கித் தனித்து வைத்துக் கொண்டு பேசுகிருன். அதுபோலவே தாம் பெறும் இன்பத்தையும் ஒதுக்கி வைத்துப் பேசுகிருன். அப்போதுதானே ஒத்துப் பார்க்க முடியும்? தேவருலகமும் தரும் இன்பததை மறுபுறமாகவும் தராசின் இரு தட்டுகளில் வைத்து நிறுத்துப் பார்க்கிருன். அப்படி நிறுத்துப் பார்த்துவிட்டு அந்த இரண்டு இன்பங்களும் தலைவியோடு பெற்ற இன்பத்திற்கு நிகராகாது என்ற முடிவுக்கு வந்து விடுகிருன். பாட்டில் உள்ள 'இரண்டும் தூக்கில் சீர் சாலாவே' என்ற அடி இந்த முடிவைத் திட்டமாக எடுத்துக் காட்டும். இப்படி அழுத்தமாகவும் திட்டமாகவும் பேசும் தலைவன் ஒன்றை மறந்து விடவில்லை.

அத்தகைய உயர்வைத் தான் மாத்திரம் உணர்வதாகக் கூறிவிட்டால், தலைவி அந்த இன்பத்தைப் பெறவில்லையோ என கேட்பவர் ஐயுறுவதற்கு இடமாகிவிடும். அத்தகைய ஐயப்பாடு

# கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்...

இப்பூவுலகம் முழுதும் தரும் இன்பத்தைக் கருத்திற் கொண்ட தலைவனுக்கு இன்னேர் இன்பம் மனத்தில் படுகிறது. இவ்வுலகத்திற்கு மாருக நமக்குத் தோன்றுவது மறுவுலகம்தானே? ஆகையால் தேவலோகத்தைப் பற்றி எண்ணுகிருன். அது தரும் இன்பத்தையும் ஆய்ந்து பார்க்கிருன். தேவருலகம் தரும் இன்பம் அவன் கேள்வியுருததன்று. தேவருலக இன்பம் சிறப்பு மிக்கது என்பதை அவன் அறிவான். அதற்கு ஏன் அந்தச் சிறப்பு வந்தது? அது பெறுதற்கு அருமையானது என்பதால். பெருமைக்குக் காரணமாவது அருமை. எளிதில் பெறக்கூடியதில் நாம் சிறப்புக் காண்பதில்லை. அரிதில் கிடைப்பதைத் தான் நாம் சிறப்பானதாகக் கொள்கிறேம். தேவலோகம் அவ்வளவு எளிதாக அடையக்கூடியதா? அதனை அடைவது அரிதல்லவா? ஆகவே, அத்தகைய பெறுதற்கரிய சிறப்பு மிக்க தேவலோக இன்பம் அவன் கருத்திலே தோன்றுகிறது.

இந்த இரண்டு இன்பத்தையும் தவிர வேறு எந்த இன்பத்தையும் யாரும் உயர்வாகக் கருதுவார்கள் என்றுகூட தலைவன் எண்ணிப் பார்க்கவில்லை. எனவே தலைவியோடு தான் நுகரும் இன்பத்தை ஒருபுறமாகவும் இப்பூவுலகமும் ஏற்பட்டுவிட்டால் தலைவிக்கு மகிழ்ச்சியும் பெருமையும் உண்டாவதற்குப் பதிலாகக் குறையே உண்டாகிவிடக் கூடும். அதைத் தவிர்ப்பதற்காக அவ்விரண்டு இன்பமும் இந்த இன்பத்திற்கு ஈடாகாதது தனக்கு மாத்திரமல்ல, தன் தலைவிக்கும் சேர்த்தே என்பதை உணர்த்த 'எமக்கே' என்று கூறிவிடுகிருன். இப்போது பாட்டினை முழுதுமாக மறுபடியும் படித்துப் பார்த்தால் அது வெளியிடும் உணர்ச்சியின் வேகமும் ஆழமும் தெற்றென விளங்கும்.

* * *

இதுகாறும் உயிரினங்கள் அனைத்திடையேயும் குறிப்பாக, விலங்கு முதலியவற்றிடையே இத்தகைய ஆண்-பெண் பாலுணர்வு எந்த அளவுக்கு அழுத்தமாகவும் ஆழமாகவும் இடம் பெற்றிருக்கிறது என்பதையும் ஊர் பேர் தெரியாத தலைவனையும் தலைவியையும் இவ்வுணர்வு என்ன பாடு படுத்துகிறது என்பதைப் பற்றியும் கண்டோம். இனி, குறிப்பிட்ட ஆண்-பெண்ணுக்கிடையே இவ்வுணர்வு என்ன விளைவை உண்டாக்கிற்று என்பதை இலக்கியங்களில் அமைந்திருக்கிறபடி காண்போம்.

விசுவாமித்திரனுடன் இராமனும் இலக்குவனும் மிதிலை நகரத்தில் சென்று

நீதிபதி மு.மு.இஸ்மாயில்

| | | | |
|---|---|---|---|
| 5. | Mr. R. THIAGARAJAN | 4-A, Thangalpettai, Madras-600 041. | Executive. |
| 6. | Mr. R. NAGARAJAN | 4-A, Thangalpettai, Madras-600 041. | Executive |
| 7. | Mr. M. PL. NADARAJAN | 442, Raja Street, Coimbatore-1. | Busin[illegible] |
| 8. | Mr. R. R. COWSIK | 316/F 9A, Main Road Jayanagar, V Block, Bangalore-560 041. | Retd. Executive |
| 9. | Mr. T. JAYARAMAN | Adamangalam, Tanjore Dist. | Business |
| 10. | Mrs. USHA NAIR | 38, Hira Chand Road, Cox Town, Bangalore-560 005. | Stock & Share Broker. |
| 11. | Mrs. RM. SOLAICHI | 1/B, Sir C. P. Ramasamy Iyer Road, Madras-600 018. | Stock & Share Broker. |

## (e) Profits and Dividends :

| Year ended | Profit Before Tax | Profit After Tax | Dividend Declared Equity |
|---|---|---|---|
| 31-12-1976 | Rs. 1,32,816.92 | Rs. 46,485 | 5% (Proposed) |

The Company started functioning as a Public Limited Company only from 1st January 1976.

## (f) Particulars relating to the Company as on the date of the latest balance sheet viz., 31st December 1976 :

| | |
|---|---|
| (i) Authorised Capital | ...... Rs. 24,00,000 |
| (ii) Issued Capital | ...... Rs. 6,63,000 |
| (iii) Free Reserves | ...... Rs. 12,500 |
| (iv) Deposits | ...... Rs. 20,25,927 |
| (v) Borrowings—Secured/Unsecured | ...... Rs. 2,50,000 |
| (vi) Accumulated balance of Loss | ...... Rs. Nil. |
| (vii) Proposed Utilisation of deposits | ...... For Hire Purchase Financing |

This advertisement is issued under the authority of and in the name of the Board of Directors of the Company who approved the above text by a resolution dated 24th February 1977 and a copy of the same has been delivered to the Registrar of Companies, Madras.

By Order of the Board,

P. V. SIVAN NAIR,

Chief Executive.

கொண்டிருக்கிறார்கள். கன்னி மாட நத்தில அன்னம் ஆடும் துறையை நோக்கிப் பேரெழில் பரவ சீதை நிற்கிறாள். அந்தச் சீதையைக் கண்டவர்கள் அவளுடைய அழகுக்கு எல்லை காணாராக, மண்ணுலகத்தார் இந்த அழகை ஓயாமல் தொடர்ந்து கண்டு அனுபவிப்பதற்குத் தேவர்களைப் போல இமையாத கண்களைப் பெற்றோ மில்லையே என்று குறையுறும்படியாகவும், தேவர்களோ தாம் இமையா நாட்டம் பெற்றிருந்த போதிலும் அத்தகைய கண்கள் இரண்டே ஆதலின் அவை அவளுடைய அழகினை முற்றிலும் ஒருங்கே பார்க்கப் போதாவே என்று குறையுறும்



படியாகவும் சீதையின் அழகு அமைந்திருக்கிறது. அழகெனும் ஓர் அணியும் அழகு பெற நின்ற பெண் கனியை வீதி வழியே சென்று கொண்டிருந்த இராமன் காண்கிறான்; அதே சமயத்தில் சீதையும் அவனைப் பார்க்கிறாள். இப்படி ஒருவர் தம் கண்களால் மற்றவரைக் காண்பதை, ஒருவருடைய கண்கள் மற்றவர் கண்களைக் கவ்வின என்று கம்பன் கூறுவான். ஒன்றை மற்றொன்று கவ்வுமானால் எதற்காக அப்படிக் கவ்வுகிறது என்ற கேள்வி தானாகவே பிறக்கிறது. கவ்வுகின்ற ஒன்று கவ்வப்பட்டதை உண்டு அனுபவிக்க விழைகிறது. இங்கோ கவ்வியதும் கவ்வப்பட்டதும் கண். அத்தகைய நிலையில் ஒருவர் கண்கள் மற்றவர் கண்களை அனுபவிப்பதென்பது எப்படி? அந்த ஒருவர் கண்கள் மற்றவர் கண்களின் மூலமாக ஊடுருவிச் சென்று உள்ளே புகுந்து இடம் பெற்று விடுவதுதான்.

இப்படி ஒருவர் கண்கள் மற்றவர் கண்களைக் கவ்வி உண்ணும்போது, உணர்வு தானாகவே இயங்கத் தொடங்கி விடுகிறது. பெண்ணின் உணர்வு அவளிடத்திலே தங்காது துள்ளிக் குதிக்கிறது. அது போலவே ஆணுடைய உணர்வும் அவனிடத்துத் தங்காது பாய்ந்து வெளிப்படுகிறது. இப்படி வெளிப்படும் இருவர் உணர்வுகளும் ஒன்றிவிடும்போது ஒருவருடைய கண்கள் மற்றவர் கண்களைக் கவ்வி உண்ணும் அனுபவம் நிறைவு பெற்று விடுகிறது.

ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே இருக்கும் காதற் பிணைப்பினைக் கண்கள் வெளிப்படுத்தும் அளவுக்கு வாய்ச் சொற்கள் வெளிப்படுத்த சக்தியற்று விடுகின்றன. ஆகவேதான் வள்ளுவரும்,

**'கண்ணொடு கண்ணினை நோக்கு**
**ஒக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல'**

என்று கூறுகின்றார். இங்கே, இராமனுடைய கண்களும் சீதையுடைய கண்களும் ஒன்றையொன்று கவ்வி உண்ணவே செய்து விடுகின்றன. அத்தகைய செயலின் காரணமாக இருவருடைய உணர்வும் ஒன்றிவிடுகின்றன. உணர்வுகள் ஒன்றியவிடத்து அந்த ஓர் உணர்வு மற்றோர் உணர்வை எப்படி அனுபவிக்கிறது என்பதை எடுத்துச் சொல்வதற்கே இடமில்லாமல் போய் விடுகிறது. அனுபவிப்பதும் அனுபவிக்கப்படுவதும் அனுபவமும் ஒன்றிவிடுகிற நிலை அது.

இத்தகைய நிலை ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே மாத்திரம் உண்டாகிறது என்பதில்லை. ஆண்டவனுக்கும் அடியவனுக்குமிடையேயும் உண்டாகிறது. ஆனால் இந்த ஒன்றிவிட்ட நிலை தொடர்ந்து நீடிக்குமானால் ஆண்-பெண் என்ற வேறுபாடும் அதன் காரணமாகப் பிறக்கும் உணர்ச்சித் துடிப்புகளும் இல்லாமலே போய்விடும். அது போலவே ஆண்டவன் வேறு, அடியவன் வேறு என்பது போய் இருவருக்குமிடையேயுள்ள பக்திப் பிடிப்பும் தனிப்பட்டு எடுத்துக் கூற முடியாமல் போய்விடும். இவ்விரு நிலையையும் ஒருங்கே உணர்த்துமாப்போல் மாணிக்கவாசகர் தம் திருக்கோவையாரில் அழகாகச் சொல்லுவார்.

# "சொல்லிய குறியின், அத்தோன்றலே அவன்!"

'என் மனம் நல்ல வழியிலன்றித் தவறான வழியில் போகுமோ? போகாது. அப்படியிருக்க, இந்த சீதையின்பால் என் மனம் செல்லுமாயின் நிச்சயமாக அவள் கன்னியே ஆவள்; இதற்கு எந்த விதமான ஐயமும் இல்லை' என்று இராமன் முடிவு கட்டுகிறான். இதுகாறும் தன் மனம் சென்ற நெறியைத் தெரிந்தவன் அவன். இதுவரையிலும் அவன் மனம் தவறான வழியில் சென்றதே இல்லை. ஆகையால் சீதையின்பால் தன் மனத்தை இழந்த போதும் அந்த மனம் தவறான வழியில் சென்றிருக்க முடியாது; ஆகவே அந்தச் சீதை கன்னியாகவே இருக்கவேண்டும்; இதில் எவ்வித ஐயமும் இல்லை என்ற திட்டவட்டமான முடிவுக்கு வந்து விடுகிறான்.

இவ்வாறு தன் மனச்சாட்சியையே உரைகல்லாகக் கொண்டு ஐயத்திற்கு இடமிருக்கக்கூடிய கட்டங்களில் ஒரு முடிவுக்கு வருவது மனோதத்துவ அடிப்படையிலும் ஏற்றுக் கொள்ளக் கூடியதொன்றே ஆகும். காளிதாசர் தம் சாகுந்தல நாடகத்தில், '**ஸதாம்ஹி ஸந்தேஹபதேஷு வஸ்துஷு-ப்ரமாணம் அந்தக: கரணப்ரவ்ருத்தய:**' —அதாவது, 'சான்றோர், ஐயப்பாட்டுக்குரிய இடங்களில் தம் அந்தக் கரணத்தின் ஆழ்ந்த ஈடுபாட்டையே பற்றுக் கோடாகக் கொள்வர்' (அங்கம்—1. சுலோகம்—20.) என்று கூறியிருப்பது இதனை வலியுறுத்தும். எனவேதான், சீதையின்பால் தன் கருத்தை இராமன் இழந்தது குற்றத்திற்கு உள்ளாகாது என்பதை வலியுறுத்த 'வசைஇல் ஐயன்' என்று குறிப்பிடுவான் கவிஞன்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே உள்ள இந்த ஈர்ப்புச் சக்தி எவ்வளவு வலிமை உடையதாக இருந்தபோதிலும் அது வரம்பு மீறி, எல்லை கடந்து, கரை புரண்டு விடுவதில்லை. அப்படி இருக்குமானால் திருமணம் என்ற நியதிக்கும் கட்டுப்பாட்டுக்கும் பொருள் இல்லாமலே போய்விடும். ஆகவே இராமன் தன மனத்திலே சீதையிடத்துத் தனக்கு உண்டான காதலைச் சிந்தித்து, சோதித்து, பொறுப்போடு நடந்தது அவன் 'நடையின் நின்று உயர் நாயகன்' என்ற காரணத்தால் மாத்திரம் அல்ல. தமிழில் அமைந்துள்ள இலக்கியம் அனைத்தின்படியும் எந்த ஆண்மகனும அப்படி சிந்தித்துப் பார்க்கக்கூடியவனே. இதன் காரணமாகவேதான் சீதைக்கும் இதைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. கன்னிமாடத்தின் மேல் நின்று கொண்டிருந்த அவள், வீதியிலே நடந்து சென்ற இராமனைக் கண்டு தன் உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டாள் என்பது உண்மை. ஆனால், 'அப்படிச் சென்றவன் யார்? அவன் பெயர் என்ன? அவனுடைய அந்தஸ்து என்ன?' என்பது பற்றியெல்லாம் அவளுக்கு எதுவும் தெரியாது. அதே சமயத்தில் சிவ தனுசை வளைப்பவன் யாரோ அவனுக்குத்தான் தன்னைத் திருமணம் செய்து கொடுப்பதாகத் தன் தந்தையாகிய ஜனகன் முடிவு செய்திருக்கிறார் என்பதும் தெரியும். ஆகவே அவள் காதல் நிறைவேற வேண்டுமானால், வீதியிலே அவள் கண்ட இராமன் சிவதனுசை வளைக்கக் கூடியவனாக இருக்க வேண்டும்.

இராமன் சிவதனுசை முறித்துவிட்ட பிறகு நீலமாலை என்னும் அவளுடைய தோழி வந்து நடந்ததைக் கூறுகிறாள். அப்படிச் சொல்லும்போது இராமனைச் சித்திரிக்கிறாள். 'பூங்கணை மயல்விளை மதனர்க்கும் வடிவு மேன்மையான்' என்று அவனுடைய வடிவத்தை வர்ணிக்கிறாள். இராமன் என்பது அவன் பெயர் என்றும் குறிப்பிடுகிறாள். அவன் தசரதன் மகன் என்றும் சொல்கிறாள்.

'இளைய கோவொடும் பராவ அரு
முனியொடும் பதிவந் தெய்தினான்'

**நீதிபதி மு.மு. இஸ்மாயில்**

# ஓடோமாஸ் மட்டுமே உங்களுக்குக் கொசுக் கடியிலிருந்து 2-விதங்களில் பாதுகாப்பை அளிக்கிறது.

## நீங்கள் இரவில் நிம்மதியாக உறங்க உதவுகிறது.

இதர கொசு விரட்டியைப் போலல்லாது
ஓடோமாஸ் உங்களைப் பாதுகாக்கிறது.



அதன் வாசனை கொசுக்களை விரட்டியடிக்கிறது.



அதன் ஒப்பற்ற கலவைப்பொருள் உங்கள் சருமத்தை இரவு முழுவதும் கொசுக்களிலிருந்து கவசம்போல் காக்கிறது.

இன்று இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் கொசு விரட்டி ஓடோமாஸ் என்பதில் வியப்பு எதுவுமில்லை.

உடனே
# ஓடோமாஸ்
## உபயோகியுங்கள்.

இல்லையேல்
கொசுக்கள் உங்களுக்கு சொல்ல முடியாத தொல்லையைத் தரும்.

சிறு குழந்தைகளின் மென்மையான மேனிக்கு முற்றிலும் பத்திரமானது.

odomos
MOSQUITO REPELLENT

மச்சர் கா துஷ்மன்

என்று சொல்கிறன். வில்லை எடுத்து வளைக்கையில் அது முறிந்து விழுந்தது என்றும் சொல்கிறள். முதல் நாள் வீதியிலே சென்றவன் தசரதன் மகன் என்பதோ, இராமன் என்பதோ சீதைக்குத் தெரியாது. ஆனல் அவன் ஒரு முனிவனுடனும், இளையவனுடனும் சென்றதை அவள் கண்டிருக்கிறள். ஆகையால் நீலமாலை சொன்னவற்றிலிருந்து வில்லை வளைத்தவன் அவனுகத்தான் இருக்க வேண்டும் என்று ஓரளவு உறுதியும் செய்து கொள்கிறள். என்றாலும் அவன் தானுவென்று அவளால் நிச்சயமாக முடிவு செய்வதற்கு முடியவில்லை. அப்படி வில்லை வளைத்தவன் யார் என்பதைக் கண்ட பிறகுதான் முதல் நாள் அவள் பார்த்தவன் தானு அவன்? அல்லது வேறு ஒருவனு என்று தெரியும். அதே சமயத்தில் சீதையினுடைய மன நிலையில் அப்படி ஒரு திடமான முடிவுக்கு வரவும் முடியாது.

இராமனிடம் கருத்து ஒருமித்து விட்டாள் அவள். அவன் நினைவாகவே தவிப்புக் கொண்டிருந்தாள். அப்படி அவள் இருந்த நிலையில்தான் ஒருவன் வில்லை வளைத்துவிட்ட செய்தி வந்து சேர்கிறது. இந்தக் கட்டத்தில் அவளைப் போன்ற இளம் பெண் யாருடைய உள்ளமும் குழப்பத்தில் மூழ்கிவிடுவது இயற்கையே ஆகும். இந்தக் குழப்பம் தான், அவன் இராமன் என்று முடிவு செய்து கொண்ட இடத்தும் அவளிடம் இடம் பெற்றிருக்கிறது. இருந்தாலும் அவள் மனம் எந்தத் திக்கில் சென்றது என்பதைக் கம்பன் எடுத்துக் காட்டுகிறன்.

நீலமாலை சொல்லிய அடையாளங்களிலிருந்து வில்லை வளைத்தவன் நேற்று நான் கண்டவன்தான் என்று அவள் உறுதி செய்துகொண்ட போதிலும், அவன் நேற்றுக் கண்டவனுக இல்லாவிட்டால் தன்னுடைய உயிரையே விட்டு விடுவேன் என்ற முடிவுக்கும் வருகிறள். காரணம் என்னவென்றல் தன் தந்தை வாக்குப்படி சிவதனுசை வளைப்பவன் யாராக இருந்தாலும் திருமணம் செய்து கொள்ள வேண்டும். சிவதனுசை வளைப்பவன் ஒருவன் ஆகவும், தன் மனத்தைக் கொள்ளை கொண்டவன் இன்னெருவனுகவும் இருந்துவிட்டால், ஒருவனை மனத்தில் வைத்துக் கொண்டு வேறெருவனை மணந்து வாழ முடியாது. ஆகவே தான் தன் மனத்தில் இந்த எண்ணத்தை அவள் வளர்த்துக் கொள்கிறள். இதைத் தான் கம்பனும்,

''சொல்லிய குறியின், அத்தோன்றலே அவன்;
அல்லனேல், இறப்பென்' என்று அகத்துள் உன்னிஞள்'
(பால காண்டம், கார்முகப் படலம்—63)

என்று கூறுகிறன்.

இது, ஆணுக இருந்தாலும் பெண்ணுக இருந்தாலும், அவர்கள் எந்த அளவுக்குத் தங்களுடைய உள்ளக்கிளர்ச்சியை ஒருமுகப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தார்கள் என்பதை விளக்கும்.

இதே கருத்தினை விளக்கும் இன்னெரு பாட்டு கலித்தொகையில் இடம் பெற்றிருக்கிறது. காதலனுக்கும் தனக்கும் ஏற்பட்ட உறவு எப்படித் தொடங்கியது என்பதை ஒரு பெண் தன்னுடைய தோழியிடத்தில் கூறுகிறள்:

''ஒருவன் அழகாகக் கட்டிய கண்ணி சூடிக்கொண்டு, வில்லுடன் வலிமை பொருந்திய விலங்குகளின் அடித்தடத்தைத் தொடர்வான் போல, நாள் தோறும் வருவான். என்னையும் பார்த்துக் கொண்டிருப்பான். என்பால் அவன் கொண்ட காமநோய்தனை முகத்திலே



குறிப்பால் காட்டுவானே அல்லாமல் வாய் திறந்து என்னிடத்தில் கூற மாட்டான். பல நாளும் இப்படி வந்து வந்து போய்க் கொண்டிருந்தான். அவனுக்கும் எனக்கும் எவ்வித நெருக்கமும் இல்லை. இருந்தாலும் அவன் துன்புறுவதைக் கண்டு நானும் வருந்தியவளாக உறக்கம் இல்லாது அல்லல்பட்டேன். அவனே தன் காம நோயை வெளியிட ஆற்றல் இல்லாதவனுக இருந்தான். நானே பெண்மைக்குப் பொருந்தாது என்ற காரணத்தால் அவனை எதுவும் கேட்கவில்லை. இருந்தாலும் இவன் இப்படியே எதையும் காணுமலேயே இறந்து விடுவானே என்று ஒரு நாள் எண்ணினேன். அதனுல் என் தோள்கள் மெலிந்து துயர் கண்டன. ஆகவே துணிந்து நாணமில்லாத செயல் ஒன்று நான் செய்தேன்.''

கவனமாய்ப் பார்த்துக் கொள்ள அம்மா நீங்கள் இருப்பதனால்...



# சும்மா இருக்கமாட்டான் அவன்... அதையும் இதையும் இழுத்துத் தள்ளுகிறான்!

# 'தலைவன் யார் தெரியுமா?'

ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே காணப்படுகின்ற அன்பின் உயர்வையும் ஆழத்தையும் திண்மையையும் அதனை அனுபவிப்பவர்கள்தம் வாய்க் கூற்ருக எடுத்துக் கூறும்போது பல நயங்கள் வெளிப்படுகின்றன. உண்மையில் இந்த அனுபவம் சொல்லுக்கு அப்பாற்பட்டது; சொல்லால் விரிக்கவோ விளக்கவோ பிறருக்கு உணர்த்தவோ முடியாதது. அப்படி முடியாது என்ற போதிலும் அந்த முடியாத செயலைச் செய்ய நாம் என்றும் முயன்று கொண்டே இருக்கிருேம். இத்தகைய அனுபவத்தின் காரணமாக நாம் நுகரும் இன்பமும் மகிழ்வும் எல்லையற்றனவாக ஆகிவிடுகின்றன. ஆனால் இந்த எல்லையற்ற இன்பத்தையும் மகிழ்வையும் நுகர்வதிலேயே நாம் அமைதி காண்பதில்லை. அந்த இன்பத்தையும் மகிழ்வையும் மேலும் அதிகப்படுத்திக் கொள்ள விரும்புகிருேம். அவ்வின்பத்தையும் மகிழ்வையும் சொல்லினல் விளக்கியும் விரித்தும் பிறரோடு பகிர்ந்து கொள்ளும் போது அவை மேலும்மேலும் மிகுவதாக எண்ணுகிருேம். உண்மைக் காரணம் வேறு. புலன்களால் அனுபவிக்கும் எந்த இன்பமும் நிரந்தரமாக இருப்பதில்லை. ஒரு முறை அனுபவித்துவிட்ட அவ்வின்ப நுகர்ச்சி ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத்தான் நீடித்து நிற்கும். நம்முடைய பேராசையினல் அந்த இன்ப உணர்ச்சி நிலையாக இருக்க வேண்டும் என்று விரும்புகிருேம். அதைப் பற்றிப் பிறரோடு பேசும் போதெல்லாம் அந்த இன்ப நுகர்ச்சியை நாம் மீண்டும் மீண்டும் பெறுவதாக எண்ணுகிருேம். ஆக, காலவரையறைக்குட்பட்ட இந்த நுகர்ச்சியைக் காலவரையறைக்கு அப்பாற்பட்டதாக ஆக்க நாம் செய்யும் முயற்சி இதுவாகும். இது பொதுவாக எல்லா இன்ப நுகர்ச்சிக்கும் பொருந்தும். இங்கே ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே உள்ள காதல் அல்லது காமம் என்ற இன்ப உணர்ச்சியின் அடிப்படையில் நாம் இதைக் காண்கிருேம்.

ஒரு தலைவனுக்கும் தலைவிக்குமிடையே நட்பு ஏற்பட்டுவிட்டது. அடிக்கடி தலைவியைத் தலைவன் சந்தித்துப் போகிருன். ஆனல் இருவருக்கும் திருமணமாகவில்லை. அந்த நிலையில் தலைவியைச் சந்திப்பதற்காக வந்த தலைவன், வேலிக்குப் புறம்பாக நிற்கிருன். இதனைத் தோழி பார்த்து விடுகிருள். என்ருலும் அவனைப் பார்க்காதவளைப்போல அவனைப் பழித்துரைக்கிருள். அவள் அப்படிப் பழிப்பதற்குக் காரணம், தலைவன் களவு இன்பத்தையே விரும்புகிருனேயன்றி தலைவியைக் கடிமணம் செய்வது பற்றி எண்ணவில்லையே என்ற ஆர்வம்தான். தலைவனைப் பழிப்பதில் தோழிக்குள்ள நோக்கம் நல்ல நோக்கம். அதாவது தலைவியின் நன்மையை அடிப்படையாகக் கொண்ட நோக்கம். திருமணம் செய்து கொள்ளாமலேயே தலைவனும் தலைவியும் களவொழுக்கத்திலேயே நின்று விடுவார்களேயானல் தலைவியும் அவள் குடும்பத்தினரும் ஊராருடைய ஏளனத்திற்கு ஆளாவார்களே என்பதுதான் தோழியின் கவலை. உண்மைத் தோழி யாருக்கும் அத்தகைய கவலைஇருக்கத்தான்செய்யும். தான் இப்படிப் பழிப்பதைக் கேட்டாவது திருமண முயற்சியில் தலைவன் இறங்கமாட்டான என்பதுதான் தோழியின் கருத்து. ஆகையால்தான் அவன் வந்து நிற்பதைப் பார்த்த தோழி, அவனைப் பார்க்காதது போல அவன் காதில் விழும்படி அவனைப் பழித்துப் பேசுகிருள்.



கண்ணுக்குத் தெரிந்து கொண்டிருந்த சென்னை மாநகரம் கடலின் விளிம்பில் மறைந்து விடைபெற்றுக் கொண்டது.

சில கடற்பறவைகள் கப்பலின் பின்னே வெகு தூரம்வரை 'வழியனுப்பு வதுபோல் வந்தன. அவையும் ஓர் எல்லை யில் விடைபெற்றுப் போய்விட்டன!

மேல் திசையில் மோகன வண்ணம் காட்டிக் கொண்டிருந்த சூரியனும் மெல்ல கடலுக்குள் மூழ்கி விடை பெற்றுக் கொண்டான்.

கடலுக்குள் ஹர்ஷவர்த்தன தனியாக விடப்பட்டது! நான்குபுறமும் திரும்பிப் பார்த்தால் நம்மைத் தவிர வேறு யாருமில்லை. 'தண்ணீர்... தண்ணீர்' கண்ணெட்டும் தூரம்வரை தண்ணீர்! ஓர் இனந்தெரியாத பயம் இதயத்தை மெல்ல வருடுகிறது. என் கவனம் இப்பொழுது கப்பலுக்குள் திரும்புகிறது.

நவீன வசதிகள் கொண்ட கப்பல்— நீச்சல் குளம், திறந்த மைதானம், தியேட்டர், ஹாஸ்பிடல், லைப்ரரி, தனித்தனியாக ஏர்கண்டிஷன் அறைகள். ஹோட்டல் 'டாஜ் கோரமண்டல்' நீருக்குள் நகர்வது போல்—

கப்பலுக்குள் வந்தவுடன் பலர் மருந்து போட்டுக் கொண்டார்கள். மருந்தென்றால் ஸீ -ஸிக்னெஸுக்கான மருந்து.

அப்படியும் சுஜாதா வாந்தி எடுத்த தாகக் கேள்வி! எனக்கும்கூடக் கொஞ்சம் தலை சுற்றல் இருந்தது.

அறைகளின் காரிடோரில் நடன மாஸ்டர் சோப்ரா ஆடிக் கொண்டே வந்தார்! அவரைத் தொடர்ந்து அவரது நடன மாதர்களும் அதே ஆட்டம். அதற்குப்பின் ஒய். ஜி. மகேந்திரனும், பேராசிரியர் பிரகாசமும் ஆடிக் கொண்டு வந்தார்கள். 'என்ன, நல்ல பிள்ளைகள்கூட கெட்டு விட்டார்களா?' என்று எனக்குள் ஒரு சந்தேகம்.

''நாங்கள் ஆடவில்லை; கப்பல் ஆடுகிறது'' என்கிறார் பிரகாசம்.

அவர்களுக்குப் பின்னே என் கண்களை நம்ப முடியவில்லை. டைரக்டர் சீனிவாசனும் ஆடிக் கொண்டு வந்தார்! அவர் நிச்சயமாகத் தப்புப் பண்ணமாட்டார். அது கப்பல் ஆட்டம்தான்!

இரவு சாப்பாட்டிற்கு ஏழு மணிக்கே மணி அடிக்கிறது. ஒரு நிமிஷம் பிந்திப் போனாலும் டைனிங் - ஹாலுக்குள்ளே போக முடியாது. உள்ளே போய் விட்டால் எவ்வளவு நேரம் கழித்தும் வெளியே வரலாம்!

டைனிங் ஹாலுக்கு எல்லோரும் வந்தாயிற்று. நமது அபூர்வ சகோதரர்களை மட்டும் காணோம்! அவர்கள் 'ஆத்தை'ப் பிரிந்து வந்தாலும்— 'ஐயங்கார் ஆத்துப் புளியோதரை'யைப் பிரியவில்லை. கப்பலில் ஏற்றிய மூட்டைகளில் புளியோதரை மூட்டையும் ஒன்று என்று தெரிய வந்தது!

கப்பலில் உணவு வெகு ஜோர்! அது எவ்வளவு ருசி யென்றால்—என் மேக்கப்மேன் ரங்கசாமி வாயில் மட்டும் அல்ல; மூக்குகள்,முகமெல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார் என்றால் பாருங்களேன்! சுவை கேட்டு மறுநாள் அபூர்வ சகோதரர்கள் சாப்பாட்டுக்கு முதலில் ஆஜரானார்கள்.

எல்லா வசதிகளும் கொண்ட ஹர்ஷவர்த்தன மேல் கண் பட்டுவிட்டதென்று தான் கூறவேண்டும்... 'ஏ. ஸி.' வேலை செய்யவில்லை. சுகக் கப்பல் சுண்ணாம்புக் காளவாய் ஆயிற்று. கீழ்த்தட்டிலிருந்தவர்கள் எல்லாம் மேல்தட்டிற்கு வந்து விட்டார்கள் மூச்சு வாங்க! மேல்தட்டு வாசிகளோ அதற்கு மேல்தளத்தில் — 'போகாத இடந்தனில் எல்லாம் போகத் தொடங்கி விட்டார்கள்.' கப்பல் அதிகாரிகளும் கண்டு கொள்ளவில்லை.

நள்ளிரவு. நான் கப்பலின் மேல் தளத்தில் நின்றபடி கடலை வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இருளின் விசுவரூபத்தை அந்த வங்காளவிரிகுடாவிலே கண்டேன்.

திடீர் என்று எனக்கும் மேல்தளத்தில் —ஓர் இனந்தெரியாத பெண் உருவம் எழிலாக நடந்து போகிறது...

''நடுக்கடலில் இப்படி துஷ்டதேவதைகள் மாலுமிகளை மயக்க வருவதுண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று நடுங்குகிறார் என் அருகில் இருக்கும் 'மீசை' குருமூர்த்தி.

நான் உற்றுக் கவனித்தேன். அந்த உலா வந்த தேவதை வேறு யாருமல்ல; எங்கள் யூனிட்டை சேர்ந்த கவிதா தான்!

அறையில் என் மனைவியைத் தனியாக விட்டு வந்தது ஞாபகம் வர அறைக்குச் செல்கிறேன். அழகிய படுக்கை! அயர்ந்து சாய்கிறேன். திடீர் என்று நான் ஐம்பது வயதில் குழந்தையாகிப் போனேன்!

ஆம்! தொட்டில் ஆடுவது போல் படுக்கை ஆடிக் கொண்டிருந்தது. கடல் தாய் அலையென்னும் நாவசைத்து அழகிய தாலாட்டுப் பாடி கப்பலெனும் தொட்டிலைக் கவிதை நயத்தோடு ஆட்ட, குழந்தைகள் போல் அனைவரும் ஆழ்ந்த நித்திரையில் அடங்கினோம்.

—இன்னும் வரும்.

ஆனால் தலைவனிடத்துத் தலைவிக்குள்ள காதலோ இந்தப் பழிச் சொல்லைப் பொறுத்துக்கொள்ளக்கூடியதாக இல்லை. அவன் மேல் அவள் கொண்டிருக்கிற மோகம், தன்னுடைய நன்மைக்காகத் தானே தோழி இப்படிப்பேசுகிறாள் என்று அவளை உணர்ந்துகொள்ள விடாமல் செய்து விடுகிறது. ஆகவே தோழி அப்படிப் பழிக்கத் தேவையில்லை; அந்தப் பழிப்புக்குக் காரணமான பயமும் தேவையில்லை என்ற தோரணையில் அவள் பேசுகிறாள். அப்படிப் பேசும்போது தனக்கும் தலைவனுக்கும் இடையே இருக்கும் நட்பு எத்தகையது என்பதை விளக்க முயல்கிறாள். அதாவது தன்னால் விளக்க முடியாத ஒன்றை விளக்க முயல்கிறாள். அவள் சொல்வதை நோக்கும்போது, 'எனக்கும் என் தலைவனுக்குமிடையே உள்ளநட்பு இத்தகையதாகஇருக்கையில், என்னை அவன் திருமணம் செய்துகொள்ள மாட்டானோ என்று நீ எப்படி ஐயப்பட முடியும்?' என தோழியைக் கேட்கிறாளா, அல்லது 'அவன் திருமணம் செய்து கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் இத்தகைய நட்பு ஒன்று இருப்பதே தனக்குப் போதும்' என்று அவள் சொல்கிறாளா என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாத வகையில் அவள் கூற்று அமைந்திருக்கிறது. அவளுக்கும் அவள் தலைவனுக்குமிடையேயுள்ள நட்பு இப்பூமியை விடப் பெரியதாம்; கடலைக் காட்டிலும் ஆழமுடையதாம்; வானை விட உயர்ந்ததாம். அத்தகைய நட்பைக் கொண்டிருக்கிற தலைவன் யார் தெரியுமா? கரிய கொம்புகளை உடைய குறிஞ்சி மரத்தின் மலர்களிலிருந்து பெருந்தேனைச் சேகரிக்கின்ற மலைநாட்டுக்கு உரியவன்.

'நிலத்தினும் பெரிதே வானினும்
உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு
நட்பே'

என்பது தலைவியின் இந்தக் கூற்றை எடுத்துக் காட்டும் குறுந்தொகைப் பாட்டு. தன் தோழி தன் தலைவனைப் பழிப்பதைத் தலைவியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதற்காக அவளை நேரிடையாகக் கோபித்துக் கொள்ளவும் முடியவில்லை. காரணம், அவள் தோழி என்பது ஒன்று. தனக்கும் தன் தலைவனுக்கும் திருமணம் ஆக வேண்டுமென்ற கவலையினால்தான் அவள் இப்படிப் பேசுகிறாள் என்பது இரண்டு. தலைவன் தன்னை விரைவில் மணந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் தலைவிக்கு இருந்திருக்கக்கூடும். இந்த உள்ளக் கிடக்கைகள் அனைத்தையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் வகையில் தலைவியின் கூற்று அமைந்திருக்கிறது. தலைவனைப் பற்றி அவள் கூறுவது, 'என் தலைவனைப் பழிக்கிறாயே, அவன் யார் தெரியுமா?' என்று கேள்வி கேட்டுப் பதிலிறுப்பது போல அமைந்திருக்கிறது. தேனில் மலைத் தேனுக்குத் தனிச் சிறப்பு உண்டு. ஆகையினால் மலைத் தேன் உயர்ந்தது. அந்த மலைத் தேன் குறிஞ்சி மலரில் இருந்து சேகரிக்கப்பட்டதாக இருந்தால் இன்னும் சிறப்புடையதாக இருக்கும். காரணம், 'குறிஞ்சி பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலர்வது. அப்படி மலரும் மலர்களின் தேன் சுவைமிக்கது.

குறிஞ்சித் தேனுக்கு இன்னொரு சிறப்பும் உண்டு. குறிஞ்சி பூக்குங்கால் பல்லாயிரக்கணக்கான பூக்கள் ஒரே கூட்டமாய்த் தென்படும். மலைச்சாரல் முழுவதும் பத்திப் பத்தியாக, ஒழுங்கும் அழகும் தோன்ற, வரிசையாக அடுக்கி வைத்தாற் போலக் காணப்படும். பொதுவாகத் தேன்கூடுகளில் பலவகைப் பூக்களின் தேன் கலந்து காணப்படும்; ஏனென்றால் தேனீக்கள் பல பூக்களிலிருந்தும் தேனைச் சேகரிக்கும். ஆனால், குறிஞ்சி பூக்கத் தொடங்கியதும், எங்கும் குறிஞ்சிப்பூ மயமாகவே இருப்பதால், அப்போது தேனீக்கள் கட்டும் கூடுகளில், கலப்பற்ற குறிஞ்சித் தேனே இருக்கும். இவ்வாறான தேனைத் 'தனிப்பூத் தேன்' (Unifloval honey) என்று கூறுவார்கள். Strobilan thes walliechi என்னும் குறிஞ்சியினம், பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை மலரும்போது பிற செடிகளை வளர விடாது அழுத்திவிடும் என்றும் கூறுவர். இதனாலும் குறிஞ்சித் தேன் கலப்பற்றதாகவே இருக்கும். இதனால் குறிஞ்சித் தேனுடைய அருமையும் உயர்வும் வெளிப்படும். இதை உணர்த்தவே 'பெருந்தேன்' அதாவது, பெருமைக்கு உரிய தேன் என்று தலைவி குறிப்பிடுகிறாள். அத்தகைய தேன் நிறைந்திருக்கும் நாட்டுக்குரியவன் அவள் தலைவன்.



மேக் அப் உங்கள் முகத்தின்
குறைகளை மறைக்கலாம்.

# ஒலிம்பிக் டார்ச்



**1980 - மாஸ்கோ ஒலிம்பிக் ஜோதியின் மாதிரி இது! லெனின் கிராடில் உள்ள ஓர் உலோகத் தொழிற்சாலை, இதனை வடிவமைத்து வழங்குகிறது.**

**வழக்கம் போல், இந்த ஜோதி கிரீஸிலிருந்து எடுத்துச் செல்லப்படும். ஒரு மாத ஓட்டம்! 3,000 மைல் பயணம். கிரீஸிலிருந்து 1980 ஜூன் 19-ம் நாள் கிளம்பி ஜூலை 18-ம் நாள் மாஸ்கோவை அடையும்!**

— 'ஜெய்!'

'நிறை' ஆகியவை சிறிதுகூடத் தங்க மாட்டேன் என்கின்றன என்பதாகும். 'தரியா' என்ற சொல்லாட்சியிலும் ஓர் அழகு இருக்கவே செய்கிறது. 'தரித்தல்' என்றால் தங்குதல், நிலைபெறுதல் என்று பொருள். பரவையாருக்கு இயற்கையாகப் பொறையும் நிறையும் உண்டு. அப்படி இயற்கையாக உண்டான பொறையும் நிறையும் இப்பொழுது சிறிதும் தங்கமாட்டேன் என்கின்றன.

அடுத்து, இரண்டாம் அடியிலே 'தனமும் மனமும் உலரும்' என்ற கூற்றாகும். ஏற்கெனவே பனிநீர் தெளித்தலும் சந்தனச் சேற்றை அப்புதலும் சூட்டையே விளைத்தன என்று பார்த்தோம். அதற்கு ஏற்பவே மனமும் தனமும் உலர்ந்தன என்று இப்பொழுது கவிஞர் சொல்லுகிறார். அப்படி அவை உலர்ந்ததன் காரணமாகத்தானே மாலையும் சந்தனமும்கூட வெப்பத்தைக் கொடுப்பனவாக ஆகிவிடுகின்றன. தான் இவ்வாறு துன்புறும் போதுதான் தீவினை உடையவள் என்ற எண்ணம் உண்டாகிறது. இவ்வாறு துன்புறுவதுதான் தனக்குப் பெருவாழ்வோ? என்ற கேள்வியும் தோன்றுகிறது. ஒரு சாதாரண மனித அனுபவம் நாம் அன்றாட வாழ்க்கையில் காண்பது என்னவென்றால் துன்பத்தில் உழலும் ஒருவனோ, ஒருத்தியோ தன்னைப் போல் பெருந்துன்பத்தில் உழல்பவர்கள் வேறு யாரும் இருக்கமாட்டார்கள் என்று உறுதியாக நம்புவதுதான். உண்மையில் அந்த ஒருவனைப் போலவோ ஒருத்தியைப் போலவோ துன்பத்தில் உழல்கிறவர்கள் பலர் இருக்கக்கூடும். பார்க்கப் போனால் அத்தகையவர்களின் துன்பம் இன்னும் அழுத்தமானதாகவும், ஆழமானதாகவும்கூட இருக்கக்கூடும். என்றாலும் ஒவ்வொருவரும் தன்னுடைய துன்பமே மிக்க அதிகமானது என்று எண்ணிக் கொள்கிறார்கள். அதுபோலவே பரவையாரும் தன்னுடைய தீவினையினால் இந்தப் பெருவாழ்வு தான் ஒருத்திக்குத்தான் வரவேண்டுமோ என்று கேட்கிறார். 'வினையேன் ஒருவேன் அளவோ' என்ற சொற்கள் இதனை உணர்த்தி நிற்கும். அத்துடன் அமையாமல் 'பலரும் புரியும் துயர்தான் இதுவோ' என்ற கேள்வியும் இந்தப் பச்சாதாபத்தைப் பெருக்கிக் காட்டி நிற்கிறது. யாராவது ஒருவர் துன்புறுத்தினால் மற்றொருவர் அந்த துன்பத்தைத் துடைக்க உதவக்கூடும். அதற்கு மாறாக எல்லோருமே சேர்ந்து துன்புறுத்தினால் அதனைத் துடைக்க வேறு யாருமே இருக்கமாட்டார்கள். இப்பொழுது பரவையார் தன்னுடைய துன்பம் எந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறது என்று எண்ணுகிறார் என்றால் தன்னுடைய துன்பத்தைத் துடைக்க முன்வருவதற்கு யாருமே இல்லாமல் எல்லோருமே அவருக்குத் துன்பத்தை உண்டு பண்ணுகிறவர்களாகவே இருப்பதாகத் தோன்றுகிறது.

ஆகையால்தான் 'பலரும் புரியும் துயர்தான் இதுவோ' என்று கேட்கிறார். அதே சமயத்தில் தான் படும் துயரின் தன்மையையும் அவர் உணராமல் இல்லை. ஆகையால்தான் 'படை மன்மதனார் புடை நின்று அகலார்' என்று கூறிவிடுகிறார். 'புடை' என்ற சொல்லுக்கு 'பக்கம்' 'இடம்' என்று பொருள். இங்கோ மன்மதன் சற்றும் அகலாமல் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்கிறான் என்பதை உணர்த்த புடைநின்றுஅகலார் என்று குறிப்பிடுகிறார். அப்படி அகலாமல் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்கும் மன்மதன், படை மன்மதனாகவும் இருக்கும்பொழுது அவன் விளைக்கும் துன்பத்தைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? இவ்வளவு துன்பமும் யாரால் ஏற்பட்டது? ஆரூரரால் ஏற்பட்டது. அந்த ஆரூரரோ இதனை அறியாமல் இருக்கிறார். பாட்டின் நான்காவது அடி இதனைக் கூறுகிறது. வெறுமனே ஆரூரர் என்று சொல்லி விட்டால் அவர் அறியாமல் இருப்பதில் ஆச்சரியமிருக்காது.